# அநாத்ம ஸ்ரீ விக$^{3}$ர்ஹணம்

[ஆத்மாவைத் தவிரப் பிறவான அநாத்மாவின் எல்லா ஐசுவரியமும் (ஸ்ரீயும்) நிந்திக்கத் தக்கதேயாகும் என்பதை இப்பிரகரணத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் எடுத்துக் காட்டுவதால் இவ்வாறு தலைப்பிடப் பட்டுள்ளது.]

**லப்$^{3}$தா$^{4}$ வித்$^{3}$யா ராஜ மாந்யா தத: கிம்**
**ப்ராப்தா ஸம்பத் ப்ராப$^{4}$வாட்$^{4}$யா தத: கிம் ।**
**பு$^{4}$க்தா நாரீ ஸுந்த$^{3}$ராங்கீ$^{3}$ தத: கிம்**
**யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோ(அ)பூ$^{4}$த் ॥** 1

அரசர்களால் வெகுமானிக்கத்தகுந்த வித்யை ஸம்பாதிக்கப்பட்டு விட்டது. அதனால் என்ன? பிரபுத்தன்மையுடன் (ஆளும் சக்தியுடன்) கூடி சிறப்புற்ற ஐசுவரியம் அடையப்பட்டு விட்டது. அதனால் என்ன? அழகான அங்கத்தோடு கூடிய ஸ்திரீ அனுபவிக்கப்பட்டு விட்டாள். அதனால் என்ன? எவனொருவனால் தன்னுடைய ஆத்மஸ்வரூபம் ஸாக்ஷாத்கரித்ததாக (ப்ரத்யக்ஷத்தில் அநுபவிக்கப் பட்டதாக) ஆகவேயில்லையோ (அவனுக்கு மற்ற இவற்றால்) என்ன பயன்?

**கேயூராத்$^{3}$யைர் பூ$^{4}$ஷிதோ வா தத: கிம்**
**கௌசேயாத்$^{3}$யை - ராவ்ருதோ வா தத: கிம் ।**
**த்ருப்தோ ம்ருஷ்டாந்நாதி$^{3}$நா வா தத: கிம்**
**யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோ(அ)பூ$^{4}$த் ॥** 2

எவன் ஒருவனால் தன் ஆத்ம ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்படவில்லையோ அவன் தோள்வளை முதலானவைகளால் அலங்காரம் செய்யப்பட்டு விட்டதனால என்ன? பட்டு முதலானவைகளால் போர்த்தப்பட்டு விட்டதனால் என்ன ! சுத்தமான ஆஹாராதிகளால் திருப்தியடைந்துவிட்டதனால் தான் என்ன (பயன்)?

**த்$^{3}$ருஷ்டா நாநா சாருதே$^{3}$சாஸ் - தத: கிம்**
**புஷ்டாச்சேஷ்டா ப$^{3}$ந்து$^{4}$வர்காஸ்தத: கிம் ।**
**நஷ்டம் தா$^{3}$ரித்$^{3}$ர்யாதி$^{4}$ து$^{2}$:கம் தத: கிம்**
**யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோ(அ)பூ$^{4}$த் ॥** 3

எவனொருவனால் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்பட வில்லையோ, அவனால் அழகான பல தேசங்கள் பார்க்கப்பட்டு விட்டதனால் என்ன? (அவனால்) ஸ்நேஹிதர்களும் பந்து வர்க்கங்களும் போஷிக்கப்பட்டு விட்டதனால் என்ன? தரித்திரத்தன்மை முதலிய துக்கங்களெல்லாம் போய்விட்டதனால் தான் என்ன?

**ஸ்நாதஸ் - தீர்தே2 ஜஹ்நுஜாதெ3ள தத: கிம்**
**தா3னம் த3த்தம் த்3வ்யஷ்ட - ஸங்க்3யம் தத: கிம் ।**
**ஜப்தா மந்த்ரா: கோடிசோ வா தத: கிம்**
**யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோ(அ)பூ4த் ॥** 4

எவனொருவனால் தன்னுடைய ஆத்ம ஸ்வ ரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்பட வில்லையோ அவனால் கங்கை முதலான புண்ய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்யப் பட்டதனால் என்ன? பதினாறு விதமான தானங்களும் கொடுத்தாய்விட்டதனால் என்ன? கோடிக்கணக்கான மந்திரங்கள் ஜபிக்கப்பட்டு விட்டதனால்தான் என்ன (பயன்)?

**கோ3த்ரம் ஸம்யக்3 - பூ4ஷிதம் வா தத: கிம்**
**கா3த்ரம் ப4ஸ்மாச்சா2தி3தம் வா தத: கிம் ।**
**ருத்3ராக்ஷாதி3: ஸந்த்3ருதோ வா தத: கிம்**
**யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோ(அ)பூ4த் ॥** 5

எவனொருவனால் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்பட வில்லையோ அவன் தன் வம்சத்திற்குத் தான் அலங்காரமாக இருந்து சிறப்பை உண்டுபண்ணி விட்டதனால் தான் என்ன? சரீரம் பூராவும் விபூதியினால் பூசியாகி விட்டதனால் என்ன? ருத்ராக்ஷம் முதலானவைகள் நன்கு தரித்துக் கொள்ளப்பட்டு விட்டதனால் என்ன (பயன்)?

**அந்நைர் - விப்ராஸ்தர்பிதா வா தத: கிம்**
**யஜ்ஞைர் தே3வாஸ்தோஷிதா வா தத: கிம் ।**
**கீர்த்யா வ்யாப்தா: ஸர்வலோகாஸ்தத: கிம்**
**யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோ(அ)பூ4த் ॥** 6

எவனொருவனால் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்படவே யில்லையோ, அவனால் அன்னங்களால் பிராஹ்மணர்கள் திருப்தி செய்யப்பட்டு விட்டதனால் என்ன? யஜ்ஞங்களால் தேவர்கள் ஸந்தோஷிக்கப்பட்டுவிட்டதனால் என்ன? கீர்த்தியினால் எல்லா உலகங்களும் வியாபிக்கப்பட்டு விட்டதனால் என்ன (பயன்)?

**காய: க்லிஷ்டச்சோபவாஸைஸ் - தத: கிம்**
**லப்3தா4: புத்ரா: ஸ்வீய பத்ந்யாஸ் தத: கிம் ।**
**ப்ராணாயாம: ஸாதி4தோ வா தத: கிம்**
**யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோ(அ)பூ4த் ॥** 7

எவனொருவனால் தன் ஆத்ம ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப் படவேயில்லையோ (அவனது) சரீரம் உபவாஸங்களினால் துன்புறுத்தப்பட்டு விட்டதனால் என்ன? (அவனால்) தன் பத்னியின் மூலமாக புத்திரர்கள்

அடையப்பட்டுவிட்டதனால் என்ன? பிராணாயாமம் ஸாதிக்கப்பட்டு விட்டதனால் தான் என்ன?

**யுத்3தே4 சத்ருர் நிர்ஜிதோ வா தத: கிம்**
**பூ4யோ மித்ரை: பூரிதோ வா தத: கிம் |**
**யோகை3: ப்ராப்தா: ஸித்3த4யோ வா தத: கிம்**
**யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோ(அ)பூ4த் ||** 8

எவனொருவனால் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்படவே யில்லையோ அவனால் யுத்தத்தில் சத்ரு ஜயிக்கப்பட்டுவிட்டதனால் என்ன? ஏராளமான ஸ்நேஹிதர்களை (அவன்) பூர்த்தியாகப் பெற்று விட்டதனால் என்ன? யோகா நுஷ்டானங்களினால் (அணிமாதி) ஸித்திகளெல்லாம் (அவனுக்குக்) கிடைந்துவிட்டதனால் என்ன (பயன்)?

**அப்3தி4: பத்3ப்4யாம் லங்கி4தோ வா தத: கிம்**
**வாயு: கும்பே4 ஸ்தா2பிதோ வா தத: கிம் |**
**மேரு: பாணாவுத்3த்4ருதோ வா தத: கிம்**
**யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோ(அ)பூ4த் ||** 9

எவனொருவனால் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்படவே யில்லையோ அவனால் கால்களாலேயே ஸமுத்திரம் தாண்டப்பட்டு விட்டதனால் என்ன? (அவனால்) வாயு கும்பகத்தில் நிறுத்திவைக்கப்பட்டுவிட்டதனால் என்ன? மேருபர்வதமே (அவனது) உள்ளங்கையில் தூக்கி வைத்துக்கொள்ளப்பட்டதனால் என்ன?

**க்ஷ்வேள: பீதோ து3க்3த4வத்3- வா தத: கிம்**
**வஹ்நிர் ஜக்3தோ4 லாஜவத்3- வா தத: கிம் |**
**ப்ராப்தச்சார: பக்ஷிவத் கே2 தத: கிம்**
**யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோ(அ)பூ4த் ||** 10

எவனொருவனால் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்படவே யில்லையோ, அவனால் கறந்த பாலைப்போல விஷம் குடிக்கப்பட்டதனால் என்ன? பொறியைப்போல நெருப்பு தின்னப்பட்டதனால் என்ன? பக்ஷியைப்போல ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் சக்தி கிடைத்துவிட்டதனால் என்ன?

**ப3த்3தா4: ஸம்யக் பாவகாத்3யாஸ் - தத: கிம்**
**ஸாக்ஷாத்3 - வித்2தா4 லோஹவர்யாஸ் தத: கிம் |**
**லப்3தோ4 நிக்ஷேபோ(அ)ஞ்ஜநாத்3யைஸ் - தத: கிம்**
**யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோ(அ)பூ4த் ||** 11

எவனொருவனால் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்படவே

யில்லையோ அவனால் அக்னி முதலானவைகள் நன்கு கட்டப்பட்டு விட்டதனால் (அடக்கி ஆளப்பட்டு விட்டதால்) என்ன? லோஹங்களையும் அப்படியே நன்கு கட்டி (யாண்டு) விட்டதனால் என்ன பயன்? மை முதலான வைகளின் உதவியால் புதையல் எடுக்கப்பட்டு விட்டதனால் என்ன?

**பூ4பேந்த்3ரத்வம் ப்ராப்தமுர்வ்யாம் தத: கிம்**
**தே3வேந்த்3ரத்வம் ஸம்ப்4ருதம் வா தத: கிம் ।**
**முண்டீ3ந்த்3ரத்வம் சோபலப்3த4ம் தத: கிம்**
**யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோ(அ)பூ4த் ॥** 12

எவனொருவனால் தன்னுடைய ஆத்மாவின் ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப்பட வில்லையோ அவனுக்கு பூமியில் உள்ள அரசர்களுக்கெல்லாம் அரசராயிருக்கும் தன்மை கிடைத்துவிட்டதனால் என்ன? தேவர்களுக்கு அரசனாயிருக்கும் தன்மை(யே) ஸம்பாதிக்கப்பட்டதனால் (தான்) என்ன? ஸன்னியாஸிகளுக்குள் சிரேஷ்டராயிருக்கும் தன்மை அடையப்பட்டு விட்டதனால் தான் என்ன பயன்?

**மந்த்ரை: ஸர்வ: ஸ்தம்பி4தோ வா தத: கிம்**
**பா3ணைர் லக்ஷ்யோ பே4தி3தோ வா தத: கிம் ।**
**காலஜ்ஞாநம் சாபி லப்3த4ம் தத: கிம்**
**யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோ(அ)பூ4த் ॥** 13

எவனொருவனால் தன்னுடைய ஆத்மாவின் ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப் படவேயில்லையோ அவனால் மந்திரங்களினால் எல்லோரும் ஸ்தம்பிக்கும்படி செய்தாகி விட்டதனால் என்ன? பாணங்களினால் குறியை அடித்தாகி விட்டதனால் என்ன? (சென்றகாலம், நிகழ்காலம், வருங்) காலம் (எல்லாம்) அறியப்பட்டு விட்டதனால் என்ன?

**காமாதங்க: க2ண்டி3தோ வா தத: கிம்**
**கோபாவேச: குண்டி2தோ வா தத: கிம் ।**
**லோபா4ச்லேஷோ வர்ஜிதோ வா தத: கிம்**
**யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோ(அ)பூ4த் ॥** 14

எவனொருவனால் தன்னுடைய ஆத்மாவின் ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப் படவில்லையோ, அவனால் காமமாகிற ஜுரம் போக்கடிக்கப்பட்டதனால் என்ன கோபத்தின் வேகம் மழுங்கப்பட்டுவிட்டதனால் என்ன? பேராசையின் சேர்க்கை தடுக்கப்பட்டு விட்டதனால் தான் என்ன?

**மோஹத்4வாந்த: பேஷிதோ வா தத: கிம்**
**ஜாதோ பூ4மௌ நிர்மதோ3 வா தத: கிம் ।**
**மாத்ஸர்யார்திர் மீளிதா வா தத: கிம்**
**யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோ(அ)பூ4த் ॥** 15

எவனொருவனால் தன்னுடைய ஆத்மாவின் ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப் படவில்லையோ அவனால் மோஹமாகிற இருள் போக்கடிக்கப்பட்டதனால் என்ன? பூமியிலேயே மதமில்லாதவனாக பெயர் பெற்றுவிட்டதனால் என்ன? பொறாமை என்கிற தொந்திரவும் விலக்கப்பட்டு விட்டதனால் என்ன?

**தா4துர்லோக: ஸாதி4தோ வா தத: கிம்**
**விஷ்ணோர் லோகோ வீக்ஷிதோ வா தத: கிம் ।**
**சம்போர் லோக: சாஸிதோ வா தத: கிம்**
**யேந ஸ்வாத்மா நைவ ஸாக்ஷாத்க்ருதோ(அ)பூ4த் ॥** 16

எவனொருவனால் தன்னுடைய ஆத்மாவின் ஸ்வரூபம் ஸாக்ஷாத்கரிக்கப் படவில்லையோ அவனால் பிரஹ்மாவின் (ஸத்ய) லோகம் ஸம்பாதிக்கப் பட்டதனால் என்ன? விஷ்ணுவின் (வைகுண்ட) லோகம் நன்கு பார்க்கப்பட்டு விட்டதனால் என்ன? பரமசிவனுடைய (கைலாஸ) லோகம் ஆளப்பட்டுவிட்டதனால் தான் என்ன?

**யஸ்யேத3ம் ஹ்ருத3யே ஸம்யக3நாத்ம - ஶ்ரீ விக3ர்ஹணம் ।**
**ஸதோ3தே3தி ஸ ஏவாத்ம ஸாக்ஷாத்காரஸ்ய பா4ஜனம் ॥** 17

எவனுடைய ஹ்ருதயத்தில் ஆத்மாவைத் தவிர வேறு எந்த ஐச்வர்யத்தையும் பற்றிய நிந்தனை நன்றாக எப்பொழுதும் தோன்றிக்கொண்டே யிருக்கிறதோ அவன் தான் ஆத்மாவை ஸாக்ஷாத்கரிப்பதற்குத் தகுதியுள்ளவன்.

**அந்யே து மாயிக ஜக3த்3 - ப்4ராந்தி - வ்யாமோஹ - மோஹிதா: ।**
**ந தேஷாம் ஜாயதே க்வாபி ஸ்வாத்ம ஸாக்ஷாத்க்ருதிர்பு4வி ॥** 18

மற்றவர்களோவென்றால் மாயையினால் ஏற்பட்ட இந்த ஜகத்தாகிற பொய்த் தோற்றத்தினால் ஏமாற்றப்பட்டு மயங்கி இருக்கிறார்கள். அவர்களுக்கு இவ்வுலகத்தில் ஒருபொழுதும் தன்னுடைய ஆத்மாவின் ஸாக்ஷாத்காரம் ஏற்படாது.

